அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி
தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்ஜோதி

**சன்மார்க்கத்தில்**

# திருநீறு

வள்ளல் பெருமான் கண்ட சுத்தசன்மார்க்கத்தில் திருநீறு என்ற பொருள் எந்த இலட்சணத்தில் கையாளப்படுகிறது என்பதை உணர்ந்து அறியும் வகையில் இந்தப் பகுதி எழுதப்படுகிறது. **சமயம், மதம் கடந்தது சுத்த சன்மார்க்கம்** என்பதால் திருநீறு பூசுவதோ, திருநீறு வழங்குவதோ கூடாது என்றும் அது சமயச் சின்னம் என்றும் உலகியலாற் கருதுகின்றார்கள். சுத்த சன்மார்க்கத்தைச் சார்ந்த அன்பர்களும் அவ்வாறே கருதுகின்றார்கள். அதற்கு சரியான விளக்கம் தருவது நமது கடமையாகும்.

முதலில் **சமயச் சின்னம் என்பது என்ன?** என்பதற்கு சரியான விளக்கம் தேவை. சமயத்தில் திருநீறு என்பது சின்னம் மட்டும் அல்ல. அது பூசுவதற்கும் வழங்குவதற்கும் தத்துவரீதியாக விளக்கம் உண்டு. சின்னம் என்பது அடையாளம் என்று பொருள் கொள்ளப்படுகிறது. அடையாளம் என்பது லட்சணம் எனப்படும். லட்சியத்தால் வருவது லட்சணமாகும். சிவானுபூதியில் அகத்திலும், புறத்திலும் ஏற்படுகின்ற அனுபவங்களாகிய ஒளி பிரகாசத்தின் நிறைவே ஆகும். பொதுவாக **சின்னம்** என்ற சொல்லுக்கு **சின்மயமான அருள் கனலின் அழகிய வியாபகம்** என்று பொருள்படும். இது யோக அனுபவத்தின் அக அனுபவ மாற்றங்களால் ஏற்படுகின்ற அனுபூதி நிலையாகும். இதனை விபூதி நிலை என்றும் வழங்குவர். திருநீற்றுக்கு விபூதி என்றொரு பெயரும் உண்டு. அனுபவ லட்சணங்களால் உண்டாகின்ற நிலையே திருநீற்று நிலையாகும். இனி செயற்படு பொருளின் உவமானத்தோடு அதன் உவமேயமாகிய அனுபவ தாத்பரியங்களை விரிவாக பார்ப்போம்.

திருநீறு என்ற பொருள் பசுஞ்சாணத்தை காயவைத்து அதனை நெருப்பிலிட்டு சாம்பலாக்கி மணமுடைய பொருள்களை சேர்த்து தயாரிக்கப்படுகிறது. பசுஞ்சாணம் என்பது ஆணவம், மாயை, கன்மம் மும்மல பந்தத்தினால் கட்டுண்டு கிடக்கின்ற ஜீவனை குறிக்கும். அதாவது பசுவின் மலம் - ஜீவ உபாதையான மலபோதம். அதாவது ஜீவ போதம் என்பதை குறிக்கும். தீயிலிட்டு நீறாக மாற்றுவதென்பது அருட்கனலில் ஜீவனை சேர்ப்பதன் மூலம் உண்டாகின்ற நீராகிய

பிரகாச தன்மையை குறிக்கும். மலத்தின் தன்மை நீங்கி மணத்தின் தன்மையை பெறுகிறது. அதாவது ஜீவ போதம் போய் சிவ போதம் சேருகிறது. ஜீவ குணமாகிய மலம் நீங்கி சிவ குணமாகிய தயாவிளக்கமாகிய மணம் சேருகிறது. இந்த தத்துவத்தை உணர்த்தவும் இதன் அனுபோகம் ஏற்படவும்தான் திருநீறு என்ற பொருள் அடையாளமாக மேனியில் தரித்து கொள்வதற்கு, பிறர்க்கு வழங்குவதற்க்கும் காட்டப்பட்டது. பொறி, புலன்களுக்கும், மனமாதி கரணங்களுக்கும் புலப்படாத அனுபோக கருத்தை தத்துவ விளக்கமாக வைத்து ஆன்மீக நல்லவர்களுக்கு புறத்தில் அடையாளமாக காட்டப்பட்டது.

மேலும், திருநீறு என்ற சொல் பதத்திற்கு பொருள் யாது? என்று பார்ப்போம். திரு - என்ற சொல்லுக்கு அருள் என்று பொருள்படும். நீறு - என்ற சொல்லுக்கு மாறாத தன்மையுடைய பிரகாசம் என்று பொருள்படும். மேலும் நீறு என்ற சொல்லுக்கு நிலைத்த தூய்மை என்றும் பொருள்படும். அருட்பிரகாசம் என்றும் தூய அருட்தன்மை என்றும் திருநீறு என்ற சொல்லுக்கு பொருள் கொள்ள வேண்டும். திருநீறு என்ற சொல்லை கீழ்க்காணும் விதத்தில் பிரித்து அதன் எழுத்து சொல் இவற்றிற்குரிய தத்துவ பொருள்களை உணர்ந்து கொள்ளவேண்டும்.

திரு+நீறு = திருநீறு உள்ளொலியாகிய அக்கினி பிரகாசத்தின் வியாபக தன்மை என்று பொருள்படும்.

| தி | - | ரு | - | நீ | - | று |
|---|---|---|---|---|---|---|
| (த்+இ) | | (ர+உ) | | (ந்+ஈ) | | (ற்+உ) |

தடித்த தகராகாயத்தின் உள்ளே நிலைத்து விளங்கிய உயிர் ஒளியின் பிரகாச வியாபகம் என்றும் அந்த பிரகாசம் தகரமாகிய பூத காரிய தேகத்தில் நிலைத்து வியாபகபடுதல் என்றும் பொருள்படும். அதுபோல விபூதி என்ற சொல்லுக்கு வி-பூ-தி என்பதற்கு உள்நின்ற உயிர் ஒளியின் பிரகாசம் தகராகாயத்தில் தடித்து வியாபகமாய் காரியப்படுதல் என்று பொருள்படும். அண்டத்தில் விளங்கும் அக்கினி பிரகாசம் திருநீறு என்றும் அதுவே பிண்டத்தில் அனுபவமாகி விளங்குதல் விபூதி நிலை என்றும் கொள்ளப்படும். இவ்வாறு அனுபவ விளக்கத்திற்கு உரியதும் அனுபூதி நிலைக்கு உரியதுமான திருநீறு சாதாரண பொருளற்ற கருத்தில் சின்னம் என்று சொல்லுவது உத்தமமாகாது. இது சமயம், மதம் முதலியவற்றிற்கும்,

சமயாமதாதீதமான சன்மார்க்கத்திற்கும் பொருந்துகின்ற ஒன்றேயாகும். எப்படியெனில்?

**<u>சமயம்:</u>** பக்தி மார்க்கமாகிய உருவ வழிபாட்டிற்குரிய சித்தாந்த கருத்தின்படி திருநீறு இட்டுக்கொள்வது என்பது பசுவின் சாணம் எரிந்து சாம்பலாவது போல், ஜீவனை தாங்கி நிற்கும் தேகமும் தீயில் அழிந்து முடிவில் சாம்பலாகும் என்ற யாக்கை நிலையாமை தத்துவத்தை போதிக்கும் தன்மையிலும், உணர்ந்து, விழித்து பிறவாமை பேற்றை தேகம் அழிந்து விடுவதற்கு முன்பே காலத்தில் அடைய வேண்டும் என்ற கருத்தை உணர்ந்து அதன் வழி நிற்க வேண்டும் என்பதற்காகவும் திருநீறு சொல்லப்பட்டிருக்கிறது. மதிப்புடைய ஜீவனை மரணத்தில் தள்ளுவதற்கு முன்பே விழிப்புற்று சிவானுபூதியை பெறவேண்டும் என்ற கருத்தை உணர்ந்து கொள்ளவே, அது எப்போதும் நினைவில் நிற்கவே சமயத்தில் திருநீறு செ சால்லப்பட்டது.

**<u>மதம்:</u>** மத மார்க்கத்தில் வேதாந்த கருத்தின் படி திருநீறு என்பது ஜீவ போதத்தால் உண்டான அவ குணங்களையும், அக்குணங்களின் ஆதாரமாகிய முக்குணங்களையும் போக்கி தத்துவ குணத்தின் வாச்சியார்த்தத்தை லட்சியார்த்தமாக ஆக்கும் வகையில் ஸ்தூல, சூக்கும காரணங்களில் ஜீவனோடு சம்பந்தப்பட்ட அகப்புற தத்துவமாகிய சூட்சும தத்துவங்களை சிவயோக விசாரக்கனலால் அனுசந்தானமாய் ஆக்குதலே அதன் தாத்பரீயம் ஆகும். மதத்தில் வேதாந்திகள் சன்னியாசத்திற்கு அடையாளமாக காவி உடைகளை தரிப்பதும், சிலர் வெள்ளாடைகளை தரித்து இல்லற சன்னியாசிகளாக இருப்பதும் உண்டு. சிலர் திருநீறு அணிவதில்லை. வைராக்கிய சித்தத்தால் விசார ஞானத்தைக் கொண்டு தத்துவங்களை அடக்கி தயவை நடத்துவதற்கு அடையாளமாகவே யுத்த குறியாக காவி உடை அணிந்தார்கள். அது மாதிரி அனு சந்தானம் செய்தற்குரிய ஜீவ பிரகாச தன்மையை தத்துவங்கள் அடைதற்கு குறியாக திருநீறு அணிந்து கொண்டனர் என்பதை உணர வேண்டும்.

**<u>மார்க்கங்கள்:</u>** சித்த மார்க்கங்களிலும், யோக மார்க்கங்களிலும், ஞான மார்க்கங்களிலும் கூட திருநீறு அணிகின்ற வழக்கம் உண்டு. சித்த மார்க்கத்தில் பெரும்பாலும் அணிவது இல்லை. அதில் கலைகளால் மனத்தை அடக்கி, சித்த விருத்தி ஏற்படாது செய்து சித்தத்தை சிவயோகத்தில் நிறுத்தி பெரும் வைராக்கிய புருஷர்களாக விளங்கினார்கள். அவர்களும் அண்ட கனலை சித்தத்தின் மூலம்

தனக்குள் வியாபகப்படுத்தி அனுபூதி நிலை பெற்றவர்களாதலால் மேற்படி திருநீற்றின் தத்துவம் அவர்களுக்கும் பொருந்தும்.

யோக மார்க்கத்தில் யோகிகள் இந்திரியங்களை அடக்கி, விடய சார்புகளை துறந்து, மனமடக்கி, ஊன் உறக்கத்தை விட்டு, எப்போதும் நிட்டையில் இருப்பவர்கள். ஆதலால் பிண்டத்துக்குள் ஏற்படும் யோக கனல் வியாபகப்படுவதால் மேற்படி திருநீற்றின் தத்துவம் அவர்களுக்குப் பொருந்தும்.

ஞான மார்க்கமாகிய சிவ ஞானத்தில் ஞானிகள் ஆசைகளை விட்டு பற்றற்றவர்களாகி, உள்ளத்தின் நிலையில் நின்று, அறிவாம் பான்மையில் பேதமற்றவர்களாக, எங்கும் சிவமயமாய் காணும் காட்சிக்கு உரியவர்களாக விளங்குகிறார்கள். ஆதலால் அருட்பிரகாச கனல் அவர்களுக்குள் எங்கும் ஏகதேசமாய் வியாபகப்படுவதால் மேற்படி திருநீற்றின் தத்துவம் அவர்களுக்கும் பொருந்தும்.

**<u>சுத்த சன்மார்க்கம்:</u>** சுத்த சன்மார்க்கத்தில், சன்மார்க்கிகள் ஜீவகாருண்ய மயமாய் பரிச்சயம் செய்வதன் மூலமும், மேற்படி ஜீவகாருண்ய சாதனம் முதிர்ந்து அருள் நிலைக்கு ஏறுவதால் அருள் அறிவு விளங்கி கடவுளின் இயற்கை விளக்கமாகிய பூரண திருஅருட்பேறு அவர்களுக்கு சாத்தியமாகிறது. மேலும் அருட் பூரணத்தின் பூரண பிரகாசம் அவர்களுக்குள் ஸ்தூல, சூக்கும, காரணம் ஆகிய மூன்று தேகங்களிலும் பூரணமாக காரியப்படுவதால் மேற்படி திருநீற்றின் தத்துவம் உண்மையில் பூரணமாக சுத்த சன்மார்க்கிகளுக்கே பொருந்துவதாகும். சமயத்தில் திருநீற்று ஒளி ஏகதேசம் ஜீவனில் சேர்ந்து ஏகதேசம் கரணத்திலும் சேர்ந்து முழுதும் தேகத்தை சேராது போவதால் அவர்கள் தேகத்தை விடுத்து ஜீவனில் மட்டும் பிறவா பேறாகிய **பதமுக்தி** அல்லது **விதேகமுக்தி** அடைகின்றார்கள்.

மதத்தில் திருநீற்று ஒளி ஏகதேசமாய் ஜீவனில் சார்ந்து இருப்பினும் மதசமயத்தில் சார்ந்ததை காட்டிலும் சற்று கூடுதல் விளைவை அனுபோகத்தில் உண்டு பண்ணுதலால், அதே அளவில் கரணத்தையும் சார்ந்து அதே அளவில் தேகத்திலும் சார்வதால் அவர்கள் தேகத்தை காலத்தில் நிலைத்து வைத்திருக்க கூடிய சாத்திய நிலையாகிய சமாதியை அடைகின்றார்கள். இது **தேக முக்தி** என்று செ சால்லப்படும்.

சுத்த சன்மார்க்கத்தில் சுத்த ஞானிகள் அருள் பூரணத்தை பூரணமாக பெற்று ஆன்மாவில் சார்ந்து, ஸ்தூல, சூக்கும, காரணம் ஆகிய மூன்று தேகங்களிலும் பூரணமாக வியாபகப்படுதலால் காலம் கடந்தும், நிந்தியர்களாயும், நித்திய தேகத்தை உடையவர்களாயும், சாகாக்கலா அனுபவத்திற்குரிய முத்தேக சித்தியைப் பெறுகிறார்கள். அவர்களே உண்மையில் ஜீவன் முத்தி பெற்றவர்களாகிறார்.

## <u>திருநீற்று ஒளி விளக்கம்</u>

சமயம் மதம் சன்மார்க்கம்

ஜீவன் (ஏகதேசம்) உயிர்
ஆன்மா (பூரணம்)

(கூடுதல் ஏகதேசம்)

↓ ↓ ↓

சூட்சும கரணம் அதிசூட்சும கரணம்
சூட்சும கரணம்

அதிசூட்சும
கரணம்
அதிகாரண
சூட்சுமம்

↓ ↓

↓

- இந்திரியங்கள்
தேகம் முழுதும்

↓ ↓ ↓

விதேக முக்தி (அ) தேகமுக்தி (அ) சமாதி ஜீவன்
முக்தி
பத முக்தி

சுத்த சன்மார்க்கத்தில் திருநீறு என்பது சின்னமாக அணிவது இல்லை. ஆனால் அந்த திருநீற்றின் அனுபவம் ஏற்பட வேண்டிய ஒன்றாக மார்க்கத்தில் உள்ளதால் அதனை அவரவர் கருத்துபடி அணிந்து கொள்வது அணியாது இருப்பது தவறல்ல

என்பதை அறிந்து கொள்ள வேண்டும். மேலும் சன்மார்க்க அன்பர்களிடையே சிலர் திருநீறு அணிந்து கொள்வது சரியானது என்றும், சிலர் அணிவது சரியல்ல என்றும், கருத்து நிலவி வருவதால் மேற்கூரிய உண்மை கருத்துக்களின்படி அணிவதும், வழங்குவதும் பொருத்தமுடையதே ஆகும்.

மலபந்தங்களால் கட்டுண்டு கிடக்கின்ற ஜீவனை அருட்கனலின் சாதன பரிச்சயத்தினால் கொஞ்சம், கொஞ்சமாக விடுவித்து உயிர்தன்மை பெற்று திருநீற்றின் ஒளி அதாவது அருள் பிரகாசம் பூரா தத்துவங்களையும் வேதித்து தூய்மையாக்குவதின் மூலம் சிவமணம் கமழ பூரண இயற்கை விளக்கத்தை பெறுவது சுத்தசன்மார்க்கத்தின் சாத்திய நிலை ஆதலால் அதன் அடையாளமாகிய திருநீற்றை அக்கருத்துபடி அன்பர்கள் அணிந்து கொள்வது முற்றிலும் முறையே ஆகும். திருநீறு என்பது சமய, மத, சன்மார்க்க சின்னம் என்று கொள்ளாமல் ஆன்மீக லட்சியமுடைய அன்பர்கள் அணிந்து கொள்ள வேண்டிய ஒன்றான, அனுபவ நிலைக்குரிய, புறத்தில் காட்டும் அடையாளம் என்று கொள்ளவேண்டும்.

இனி திருநீறு பிறர்க்கு வழங்குவது சம்பந்தமான முக்கிய கருத்துக்களை இங்கு பார்ப்போம். சன்மார்க்கத்தில் சாதகர்களாய் இருந்து ஜீவகாருண்ய மயமாய் சதா பரிச்சயம் செய்து கொண்டிருக்கின்ற தகுதி நிலைக்குரிய சுத்த சங்கல்பம் உடையவர்களும், ஆன்ம நேய ஒருமைப் பாட்டுரிமை உடைய அடியவர்களும் மட்டுமே பிறர்க்கு திருநீறு வழங்குவது சால பொருத்தமுடையதாகும். மற்றபடி சாதாரணர்கள் பிறர்க்கு வழங்குவதோ, அணிந்து விடுவதோ கூடாது, பிற ஜீவர்களுக்கு ஏற்படுகின்ற பிணி, பயம், துன்பம் முதலியவற்றை நீக்கும் பொருட்டு, திருவருள் சமூகத்தில் நின்று, காருண்யத்தோடு, ஆன்மநேய சம்பந்தமான தயாவிளக்கத்தோடு சுத்த சங்கல்பம் உடைய அடியவர்களே திருநீறு வழங்கவேண்டும். அப்போதுதான் அதனை பெற்று அணிந்து கொள்கின்றவர்கள் நம்பிக்கையோடு மன ஒருமையோடு செய்கின்ற காரணத்தால் அத் துன்பங்கள் தடையின்றி நீங்கக் கூடும்.

உலகியலில் சகஜ நிலைக்கு ஏற்ப அன்பர்களுக்கு துன்பத்தை போக்கும் வகையில் வழங்கப்படுகின்ற திருநீறு சுத்த சங்கல்ப ஆன்ம, உருக்க கனல் பெற்றிருப்பதால் அத்திருநீற்று அணுக்கள் மேனியில் தரித்துக் கொள்ளும் போது அது உடல் எங்கும் வியாபகமாகி துன்பத்தை தவிர்க்கிறது. இச்செயல் சன்மார்க்கத்தில் ஜீவ உபகார

நிமித்தமாய் செய்யப்படுகின்ற உபகார செயலே ஆகும். வெறும் உபசாரமல்ல.

ஆன்ம அனுபவத்திற்குரிய அருட்கிரண அணுக்களின் தொடர்பில் இருப்பவர் சதா சிவ சிந்தனையும், சங்கல்பமும் உடையவராய் இருப்பதால் அவரின் எண்ண அணுக்கள் அவர் கை திருநீற்று அணுக்கள் பிறர் மேனியில் படும் போது நிவர்த்திக்குரிய மருந்தாகவே மாறும் என்பதை சன்மார்க்க அன்பர்கள் உணர வேண்டும். மேலும் திருநீறு என்பது சாதாரண மக்களுக்கு நம்பிக்கை, மன ஒருமை, இறை உணர்வு, தூய்மை முதலியவற்றை வழங்குகின்ற வகையில் உள்ள ஒரு சாதனமே என்பதையும் புரிந்து கொள்ள வேண்டும். அச்சாதனத்தின் மூலம்தான் அன்பர்களுக்கும், ஆண்டவர்க்கும் தொடர்பை உண்டாக்கி மூவரையும் ஒரே பாதையில் எண்ணத்தின் மூலம் இணைக்க முடியும்.

இதுகாறும் விளக்கியுள்ள கருத்தின் அடிப்படையில் உணர்வு பூர்வமாக திருநீற்றை அணிந்து கொள்ள வேண்டும். இக்கருத்து விளங்காத, அறியாதவர்கள் திருநீறு அணிந்து கொள்ளாமல் இருப்பதில் தவறேதும் இல்லை. ஆனால் அவர்கள் எவ்வகையிலும் சாதகராக முடியாது என்பதை புரிந்து கொள்ள வேண்டும்.

வள்ளல் பெருமான் வடலூரில் தங்கியிருந்த காலங்களில் துயருற்ற அன்பர்களுக்கு திருக்கரங்களால் திருநீறு வழங்கி துயரினை போக்கியிருக்கிறார்கள் என்பது வரலாற்று உண்மை. ஆனால் அவர்கள் திருமேனி திருநீற்று மேனி ஆதலால் சாதாரணமாக திருநீறு அடையாளமாக பூச வேண்டிய நிலை அவர்களுக்கு இல்லை **"நீர் உற்றிய ஒல்லிய நெருப்பே, நெருப்பினுள் நிறைந்து, உள் இருள் அகற்றும் ஒளியே"** என்பது பெருமானின் திருஅருட்பா ஆகும். இது தேகத்தில் எங்கும் அருட்கனல் வியாபகமாகி பூரணமாகி உள் இருளாகிய மலபோதத்தை முற்றிலும் நீக்கிய ஒளி பிரகாசத்தின் அனுபோக லட்சணத்தை காட்டுவதாகும். இந்நிலை அடைந்தவர்கள் திருநீறு அடையாளமாக தரிக்க வேண்டிய அவசியம் இல்லை. மற்றவர்கள் அதாவது சாதகர்களும், சாதாரண அன்பர்களும் திருநீறு அணிந்து கொள்வது ஆன்மீக அருட்புற செயல்களில் ஒன்றான அடையாளமே ஆகும் என்பதை உணர்ந்து கொள்ள வேண்டும்.

சமயமாகட்டும், மதமாகட்டும், சன்மார்க்கமாகட்டும், ஆன்மீகமாகட்டும் எதுவாக இருந்தாலும் இறை உணர்வை மனிதர்க்கு உண்டுபண்ணுதற்கு நம்பிக்கையே அடிப்படையாக இருப்பதால் அந்த நம்பிக்கை ஏற்படுவதற்கு திருஅருட் சமூகத்தில் திருநீறு ஒன்றுதான்

தொடர்புடையவர்களுக்கு, அபக்குவ சாதாரணர்களையும், பக்குவா பக்குவம் உடைய சாதகர்களையும், பக்குவநிலைக்குரிய அருளுடைய பரம்பொருளையும் இம்மூன்றையும் அந்த நம்பிக்கையின் மூலம்தான் இணைத்து சாதக சாத்திய பரிபக்குவங்களுக்கு உரிய வகையில் ஆக்குவதற்க்கு சரியானதும், முறையானதுமான அந்த நம்பிக்கையை தொடக்கத்தில் தரக் கூடிய சாதனம் திருநீறு ஒன்றேயாகும். இதற்கு வேறு சாதனம் இதைத் தவிர இல்லை என்பதை லட்சனார்ந்த தன்மைகளோடும் அனுபவ அனுமானங்களைக் கொண்டும் உய்த்துணர வேண்டும்.

முற்றும்

வெளியீடு

விஷு வருடம் தை மாதம் 15-ஆம் தேதி (28.01.2002)
தைப்பூசத் திருநாளன்று தயவுடன்
வெளியிட்டது.

**சமரச சுத்த சன்மார்க்க சத்திய சங்கம்**

**புத்தூர்**

நாகப்பட்டிணம் - 611 001

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

திருவருட்பிரகாச வள்ளலார் அருளிய

## திருவருட்பா

# புண்ணிய விளக்கம்

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

பாடற் கினிய வாக்களிக்கும் பாலும் சோறும் பரிந்தளிக்கும்
கூடற் கினிய அடியவர்தம் கூட்டம் அளிக்கும் குணம்அளிக்கும்
ஆடற் கினிய நெஞ்சேநீ அஞ்சேல் என்மேல் ஆணைகண்டாய்
தேடற் கினிய சீர்அளிக்கும் **சிவாய நமஎன் றிடுநீறே.**
1

கருமால் அகற்றும் இறப்பதனைக் களையு நெறியும் காட்டுவிக்கும்
பெருமால் அதனால் மயக்குகின்ற பேதை மடவார் நசைஅறுக்கும்
அருமால் உழந்த நெஞ்சேநீ அஞ்சேல் என்மேல் ஆணைகண்டாய்
திருமால் அயனும் தொழுதேத்தும் சிவாய நமஎன் றிடுநீறே.
2

வெய்ய வினையின் வேர்அறுக்கும் மெய்ம்மை ஞான வீட்டிலடைந்
துய்ய அமல நெறிகாட்டும் உன்னற் கரிய உணர்வளிக்கும்
ஐயம் அடைந்த நெஞ்சேநீ அஞ்சேல் என்மேல் ஆணைகண்டாய்
செய்ய மலர்க்கண் மால்போற்றும் சிவாய நமஎன் றிடுநீறே.
3

கோல மலர்த்தாள் துணைவழுத்தும் குலத்தொண் டடையக்
கூட்டுவிக்கும்
நீல மணிகண் டப்பெருமான் நிலையை அறிவித் தருளளிக்கும்
ஆல வினையால் நெஞ்சேநீ அஞ்சேல் என்மேல் ஆணைகண்டாய்
சீலம் அளிக்கும் திருஅளிக்கும் சிவாய நமஎன் றிடுநீறே. 4

வஞ்சப் புலக்கா டெறியஅருள் வாளும் அளிக்கும் மகிழ்வளிக்கும்
கஞ்சத் தவனும் கரியவனும் காணற் கரிய கழல்அளிக்கும்
அஞ்சில் புகுந்த நெஞ்சேநீ அஞ்சேல் என்மேல் ஆணைகண்டாய்
செஞ்சொல் புலவர் புகழ்ந்தேத்தும் சிவாய நமஎன் றிடுநீறே. 5

கண்கொள் மணியை முக்கனியைக் கரும்பைக் கரும்பின் கட்டிதனை
விண்கொள் அமுதை நம்அரசை விடைமேல் நமக்குத் தோற்றுவிக்கும்
அண்கொள் வினையால் நெஞ்சேநீ அஞ்சேல் என்மேல்
ஆணைகண்டாய்
திண்கொள் முனிவர் சுரர்புகழும் சிவாய நமஎன் றிடுநீறே.
6

நோயை அறுக்கும் பெருமருந்தை நோக்கற் கரிய நுண்மைதனைத்
தூய விடைமேல் வரும்நமது சொந்தத் துணையைத் தோற்றுவிக்கும்
ஆய வினையால் நெஞ்சேநீ அஞ்சேல் என்மேல் ஆணைகண்டாய்
சேய அயன்மால் நாடரிதாம் சிவாய நமஎன் றிடுநீறே. 7

எண்ண இனிய இன்னமுதை இன்பக் கருணைப் பெருங்கடலை
உண்ண முடியாச் செழுந்தேனை ஒருமால் விடைமேல் காட்டுவிக்கும்
அண்ண வினையால் நெஞ்சேநீ அஞ்சேல் என்மேல் ஆணைகண்டாய்
திண்ண மளிக்கும் திறம்அளிக்கும் சிவாய நமஎன் றிடுநீறே.
8

சிந்தா மணியை நாம்பலநாள் தேடி எடுத்த செல்வமதை
இந்தார் வேணி முடிக்கனியை இன்றே விடைமேல் வரச்செயும்காண்
அந்தோ வினையால் நெஞ்சேநீ அஞ்சேல் என்மேல் ஆணைகண்டாய்
செந்தா மரையோன் தொழுதேத்தும் சிவாய நமஎன் றிடுநீறே. 9

உள்ளத் தெழுந்த மகிழ்வைநமக் குற்ற துணையை உள்உறவைக்
கொள்ளக் கிடையா மாணிக்கக் கொழுந்தை விடைமேல் கூட்டுவிக்கும்
அள்ளல் துயரால் நெஞ்சேநீ அஞ்சேல் என்மேல் ஆணைகண்டாய்
தெள்ளக் கடலான் புகழ்ந்தேத்தும் சிவாய நமஎன் றிடுநீறே. 10

உற்ற இடத்தில் உதவநமக் குடையோர் வைத்த வைப்பதனைக்
கற்ற மனத்தில் புகுங்கருணைக் கனியை விடைமேல் காட்டுவிக்கும்
அற்றம் அடைந்த நெஞ்சேநீ அஞ்சேல் என்மேல் ஆணைகண்டாய்
செற்றம் அகற்றித் திறல் அளிக்கும் சிவாய நமஎன் றிடுநீறே. 11

திருச்சிற்றம்பலம்

## சிவபுண்ணியத் தேற்றம்

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

கடவுள் நீறிடாக் கடையரைக் **கண்காள்**
கனவி லேனும்நீர் காணுதல் ஒழிக
அடவுள் மாசுதீர்த் தருள்திரு நீற்றை
அணியும் தொண்டரை அன்புடன் காண்க
தடவும் இன்னிசை வீணைகேட் டரக்கன்
தனக்கு வாளொடு நாள்கொடுத் தவனை
நடவும் மால்விடை ஒற்றியூர் உடைய
நாதன் தன்னைநாம் நண்ணுதற் பொருட்டே. 1

போற்றி நீறிடாப் புலையரைக் கண்டால்
போக போகநீர் புலமிழந் தவமே
நீற்றின் மேனியர் தங்களைக் கண்டால்
நிற்க நிற்கஅந் நிமலரைக் காண்க
சாற்றின் நன்னெறி ஈதுகாண் **கண்காள்**
தமனி யப்பெரும் தனுஎடுத் தெயிலைக்
காற்றி நின்றநம் கண்நுதற் கரும்பைக்
கைலை ஆளனைக் காணுதற் பொருட்டே.
2

தெய்வ நீறிடாச் சிறியரைக் கண்டால்
சீறு பாம்புகண் டெனஒளித் தேக
சைவ நீறிடும் தலைவரைக் **கண்காள்**
சார்ந்து நின்றுநீர் தனிவிருந் துண்க
செய்ப வன்செய லும்அவை உடனே
செய்விப் பானுமாய்த் தில்லைஅம் பலத்துள்
உய்வ தேதரக் கூத்துகந் தாடும்
ஒருவன் நம்முளம் உற்றிடற் பொருட்டே. 3

தூய நீறிடாப் பேயர்கள் ஒன்று
சொல்லு வாரெனில் புல்லென அடைக்க
தாய நீறிடும் நேயர்ஒன் றுரைத்தால்
தழுவி யேஅதை முழுவதும் கேட்க
சேய நன்னெறி அணித்தது **செவிகாள்**
சேர மானிடைத் திருமுகம் கொடுத்து
ஆய பாணற்குப் பொன்பெற அருளும்
ஐயர் சேவடி அடைகுதற் பொருட்டே.
4

நல்ல நீறிடா நாய்களின் தேகம்
நாற்றம் நேர்ந்திடில் நண்உயிர்ப் படக்க
வல்ல நீறிடும் வல்லவர் எழின்மெய்
வாசம் நேரிடில் மகிழ்வுடன் முகர்க
சொல்ல ரும்பரி மளந்தரும் **மூக்கே**
சொல்லும் வண்ணம்இத் தூய்நெறி ஒன்றாம்
அல்லல் நீக்கிநல் அருட்கடல் ஆடி
ஐயர் சேவடி அடைகுதற் பொருட்டே.
5

அருள்செய் நீறிடார் அமுதுனக் கிடினும்
அம்ம லத்தினை அருந்துதல் ஒழிக
தெருள்கொள் நீறிடும் செல்வர்கூழ் இடினும்
சேர்ந்து வாழ்த்திஅத் திருஅமு துண்க
இருள்செய் துன்பநீத் தென்னுடை **நாவே**
இன்ப நல்அமு தினிதிருந் தருந்தி
மருள்செய் யானையின் தோலுடுத் தென்னுள்
வதியும் ஈசன்பால் வாழுதற் பொருட்டே. 6

முத்தி நீறிடார் முன்கையால் தொடினும்
முள்ளு றுத்தல்போல் முனிவுடன் நடுங்க
பத்தி நீறிடும் பத்தர்கள் காலால்
பாய்ந்து தைக்கினும் பரிந்ததை மகிழ்க
புத்தி ஈதுகாண் என்னுடை **உடம்பே**
போற்ற லார்புரம் பொடிபட நகைத்தோன்
சத்தி வேற்கரத் தனயனை மகிழ்வோன்
தன்னை நாம்என்றும் சார்ந்திடற் பொருட்டே. 7

இனிய நீறிடா ஈனநாய்ப் புலையர்க்
 கெள்ளில் பாதியும் ஈகுதல் ஒழிக
இனிய நீறிடும் சிவனடி யவர்கள்
 எம்மைக் கேட்கினும் எடுத்தவர்க் கீக
இனிய நன்னெறி ஈதுகாண் **கரங்காள்**
 ஈசன் நம்முடை இறையவன் துதிப்போர்க்
கினிய மால்விடை ஏறிவந் தருள்வோன்
 இடங்கொண் டெம்முளே இசைகுதற் பொருட்டே.
 8

நாட நீறிடா மூடர்கள் கிடக்கும்
 நரக இல்லிடை நடப்பதை ஒழிக
ஊடல் நீக்கும்வெண் நீறிடும் அவர்கள்
 உலவும் வீட்டிடை ஓடியும் நடக்க
கூட நன்னெறி ஈதுகாண் **கால்காள்**
 குமரன் தந்தைஎம் குடிமுழு தாள்வோன்
ஆட அம்பலத் தமர்ந்தவன் அவன்தன்
 அருட்க டல்படிந் தாடுதற் பொருட்டே. 9

நிலைகொள் நீறிடாப் புலையரை மறந்தும்
 நினைப்ப தென்பதை **நெஞ்சமே** ஒழிக
கலைகொள் நீறிடும் கருத்தரை நாளும்
 கருதி நின்றுளே கனிந்துநெக் குருக
மலைகொள் வில்லினான் மால்விடை உடையான்
 மலர்அ யன்தலை மன்னிய கரத்தான்
அலைகொள் நஞ்சமு தாக்கிய மிடற்றான்
 அவனை நாம்மகிழ்ந் தடைகுதற் பொருட்டே.
 10

திருச்சிற்றம்பலம்

## 71. முத்தி உபாயம்

திருச்சிற்றம்பலம்

ஒற்றி ஊரனைப்
பற்றி நெஞ்சமே
நிற்றி நீஅருள்
பெற்றி சேரவே. 1

சேர நெஞ்சமே
தூரம் அன்றுகாண்
வாரம் வைத்தியேல்
சாரும் முத்தியே. 2

முத்தி வேண்டுமேல்
பத்தி வேண்டுமால்
சத்தி யம்இது
புத்தி நெஞ்சமே. 3

நெஞ்ச மேஇது
வஞ்ச மேஅல
பிஞ்ச கன்பதம்
தஞ்சம் என்பதே. 4

என்ப தேற்றவன்
அன்ப தேற்றுநீ
வன்பு மாற்றுதி
இன்பம் ஊற்றவே. 5

ஊற்றம் உற்றுவெண்
நீற்றன் ஒற்றியூர்
போற்ற நீங்குமால்
ஆற்ற நோய்களே. 6

நோய்கள் கொண்டிடும்
பேய்கள் பற்பலர்
தூய்தன் ஒற்றியூர்க்
கேய்தல் இல்லையே. 7

இல்லை இல்லைகாண்
ஒல்லை ஒற்றியூர்
எல்லை சேரவே
அல்லல் என்பதே. 8

அல்லல் என்பதேன்
தொல்லை நெஞ்சமே
மல்லல் ஒற்றியூர்
எல்லை சென்றுமே. 9

சென்று வாழ்த்துதி
நன்று நெஞ்சமே
என்றும் நல்வளம்
ஒன்றும் ஒற்றியே. 10

திருச்சிற்றம்பலம்